


ஒழுக்கம் உயிரினும் ஓம்பப்படும்

# குறள் முழக்கம்




திருவள்ளுவர் ஆண்டு-2053 பங்குனி-27 பொ.ஆ.2023- ஏப்பிரல்-10

உலகத் திருக்குறள் இணையக் கல்விக்கழகம் வெளியிடும் இலவச இணையத் திங்களிதழ்

பேராசிரியர் மா.நன்னன் சிறப்பிதழ்

## தொலைக்காட்சி உலகில் தமிழ்க்காட்சி தோற்றுவித்த புத்துலகப் புலவர் பேராசிரியர் மா.நன்னன் பெரும்புகழ் போற்றுவோம்!

“மறைமலை அடிகளும் பரிதிமாற்கலைஞரும் தம் பெயர்களை மாற்றிக்கொண்டதுபோல் நன்னனும் திருஞானசம்பந்தன் என்கிற தன்னுடைய பெயரை, ‘நன்னன்’ என்று மாற்றிக்கொண்டார். பெயரை மட்டும் மாற்றம் செய்யவில்லை நன்னன். தமிழ் மொழிக்காகப் பல மாற்றங்களைச் செய்தார். அதைச் சுவைபட எழுதுதல் குறித்துப் பாடமெடுத்தார்; பயிற்சி கொடுத்தார்.



**“நீந்தினால்தான் பள்ளியில் சேர்ப்பார்கள்!”**

இப்படித் தமிழுக்காகவும் அதன் வளர்ச்சிக்காகவும் வளர்ந்து மறைந்த நன்னன், தன் ஆரம்பக்கால கல்வி குறித்து இப்படிக் குறிப்பிடுகிறார். “விவசாயக் குடும்பத்தைச் சேர்ந்தது எங்கள் குடும்பம். எல்லோருக்கும் விவசாயம் மட்டுமே தெரிந்த எங்கள் ஊரில் ஒரு தனியார் பள்ளிக்கூடம் இருந்தது. அந்தப் பள்ளிக்கும் எங்கள் குடும்பத்துக்கும் ஏதோ விரோதம். அன்றைய காலத்தில் பள்ளிக்கு அனுப்பாமல் இருந்தாலும் இருப்பார்களே தவிர, எதிரிகளின் பள்ளிக்கூடங்களில் குழந்தைகளைச் சேர்க்க மாட்டார்கள். இதனால், என்னையும் என் பெற்றோர்கள் அந்தப் பள்ளியில் சேர்க்கவில்லை. எங்கள் ஊரில் மணிமுத்தாறு ஒருபக்கமும் வெள்ளாறு மற்றொரு

பக்கமும் ஓடிக்கொண்டிருக்கும். இந்த ஆறுகளில் எங்கள் ஊர் பிள்ளைகள் எல்லோருக்கும் நீந்தத் தெரியும். ஏனெனில், குழந்தைகள் நன்றாக நீந்தினால்தான் பள்ளியிலேயே சேர்ப்பார்கள். நீச்சலுக்குப் பிறகு நானும் அருகில் இருந்த திருமுட்டம் பள்ளியில் சேர்க்கப்பட்டேன்” என்று ஒருமுறை குறிப்பிட்டிருக்கிறார்.

**“இங்கேயே விட்டுட்டுப் போங்க!”**

அந்தப் பள்ளியில் எட்டாம் வகுப்புவரை படித்த நன்னன், பிறகு குடும்பத்தினருடன் இணைந்து விவசாயம் செய்துகொண்டிருந்தார். இந்தச் சூழலில், தங்கள் வீட்டில் செய்த வெல்லக்கட்டிகளை விற்பதற்காகத் தன் தந்தையாருடன் சிதம்பரத்துக்குச் சென்றார் நன்னன். அங்கே, மன்னார்குடி சோமசுந்தரம் பிள்ளை என்பவரின் வீட்டுத் திண்ணையில் அமர்ந்து இருவரும் சாப்பிட்டபோது, நன்னனின் தந்தையிடம்... சோமசுந்தரம் பிள்ளை, “என்ன செய்கிறார் உம் மகன்” என்று கேட்டுள்ளார். அதற்கு அவர், “எங்கள் அப்பா குடும்பம் பார்க்கிறான்” என்று சொல்லியுள்ளார். இதைக் கேட்டு அதிர்ந்த சோமசுந்தரம் பிள்ளை, “என்ன, குடும்பம் பார்க்கிறானா. குடும்பத்தைப் பார்க்கத்தான் நீங்க இருக்கீங்க. உங்க மூத்த பிள்ளைங்க இருக்கிறாங்க. அப்புறம் என்ன” என்று வினவியதோடு, “இவனை இங்கேயே படிக்க விட்டுட்டுப் போங்க” என்று கண்டித்துள்ளார்.

**“வாழ்க்கையில் நிலைக்கப் படிக்க வேண்டும்!”**

அதன் காரணமாக, அந்த ஊரில் இருந்த அண்ணாமலை பல்கலைக்கழகத்தில் புலவர் வகுப்பில் சேர்வதற்கான புதுமுகத் தேர்வுக்குத் தயார் செய்கிற பள்ளி ஒன்றில் நன்னன் சேர்க்கப்பட்டார். அவரைப்போலச் சில பையன்களோடு மாதம் ஐந்து ரூபாய் சாப்பாட்டுக்கு ஓர் ஆச்சியம்மா வீட்டில் தங்கிப் படித்தார் நன்னன். இங்கு படித்த அந்த வசந்தகாலம் பற்றி அவர், “எட்டாம் வகுப்புப் படித்ததோடு வந்திருந்தால் நான் அப்போதே ஓடியிருப்பேன். ஆனால், இரண்டு ஆண்டுகள் விவசாயத்தில் அதிகம் உழைத்ததால், இந்தச் சுகமான வாழ்க்கையில் ஓர் ஆர்வம் வந்துவிட்டது. இந்த வாழ்க்கை நிலைக்க வேண்டுமென்றால் படிக்க வேண்டும். அதனால் எனக்குப் படிக்க வேண்டும் என்கிற ஆர்வம் வந்தது. அப்புறம் படித்தேன்; நன்றாகப் படித்தேன்” என்று குறிப்பிடுகிறார்.

**“எனக்கு உதவுவது புலவர் படிப்புதான்!”**

இப்படிப் பாடுபட்டுப் படித்த நன்னன், அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் படித்து, அந்த ஆண்டு நடைபெற்ற பல்கலைக்கழகத் தேர்வில் முதல் மாணவனாகத் தேறியபோது உ.வே.சாமிநாத ஐயர் அவருக்கு 50 ரூபாய் பரிசுத்தொகை வழங்கினார். அந்தப் பணத்திலும் தன்னுடைய இறுதியாண்டுப் படிப்புக்கான புத்தகங்களை வாங்கிக் குவித்த நன்னன், மேலும் 20 புத்தகங்கள் வாங்குவதற்கான ஒரு பட்டியலை உ.வே.சா-விடம் அளித்தார். அவர் கேட்ட புத்தகங்களையும் வாங்கிக் கொடுத்துவிட்டார் உ.வே.சா. படிப்பில் நன்கு கவனம் செலுத்திப் படித்த நன்னன், பின்னாளில் தமிழ்ப் புலவர் பட்டம் பெற்று பல மேல்நிலை வகுப்புகளுக்கு பாடம் நடத்தினார். ‘தமிழ்ப் புலவர்’ குறித்து அவர் சொன்னபோது, “எனக்கு இப்பவும் உதவி செய்வது என் புலவர் படிப்புதான்” என்றாராம்.

**‘குங்கும’த்தில் எழுதச் சொன்ன கருணாநிதி!**

“ ‘தேர்தலில் வெற்றிபெற்றதைக் கண்டு நான் இறும்பூதெய்துகிறேன்’ என்றால், ‘இந்தத் தேர்தலில் தோற்றுப்போய்விடுவாய், எப்படி வெற்றிபெற்றாய்’ என்று கேட்டதாகும். ‘நீங்கள், நலமுடன் இருப்பதைக் கண்டு நான் இறும்பூதெய்துகிறேன்’ என்றால், ‘நீ செத்துப் போயிருப்பாய் என்று நினைத்தேன். நீ எப்படி உயிருடன் இருக்கிறாய்’ என்று பொருள். இதை, தவறாக எல்லோரும் பயன்படுத்துகிறோம். ‘இறும்பூது’ என்பதற்கு ஆச்சர்யம், வியப்பு, அதிசயம் என்று பொருள். அதற்கு, ‘மகிழ்ச்சி’ என்று பெரிய அறிஞர்கள்வரை நினைத்துக்கொண்டு எழுதிக்கொண்டிருக்கிறார்கள். நான் இதை ஒரு கூட்டத்தில் சொன்னேன். அதைக் கேட்ட மு.கருணாநிதி, ‘இதை எல்லாம் நீங்கள் குங்குமத்தில் எழுதுங்கள்’ என்று சொன்னார். நானும் குங்குமத்தில் தொடர்ந்து எழுதினேன்” என்று ஒரு பேட்டியின்போது சொல்லியிருக்கிறார் நன்னன்.

**நன்னன் உருவாக்கிய புதிய முறை!**

பிற்காலத்தில் தமிழ் வளர்ச்சித் துறையில் இயக்குநராகப் பணியாற்றிய நன்னன், ‘மூவாண்டு முனைப்புத் திட்டம்’ என்கிற ஒரு திட்டத்தைச் செயல்படுத்தினார். இதில், ‘தமிழை நூற்றுக்கு நூறு சதவிகிதம் ஆட்சிமொழியாக நடைமுறைப்படுத்த வேண்டும்’ என்று ஆணை வெளியிட்டார். இதற்கு, ‘எங்களிடம் தமிழ் டைப்ரைட்டர் இல்லை’, ‘தமிழ் அகரவரிசை இல்லை’, ‘ஆட்சிச் சொல் அகராதி இல்லை’ என்று பல காரணங்கள் சொல்லப்பட்டன. ஆனால், அவற்றுக்கான ஏற்பாடுகளைச் செய்து தமிழுக்காக வாழ்ந்த நன்னன், எழுத்தறிவித்தலில் ‘நன்னன் முறை’ என்ற புதிய முறையையே உருவாக்கினார்.

சென்னைத் தொலைக்காட்சியில் ‘எண்ணும் எழுத்தும்’, ‘தமிழறிவோம்’, ‘உங்களுக்காக’ போன்ற நிகழ்ச்சிகளை வழங்கிய நன்னன், ‘உரைநடையா... குறைநடையா’, ‘எல்லார்க்கும் தமிழ்’, ‘தவமின்றித் தமிழ் எழுதுவோம்’, ‘பைந்தமிழுரைநடை நைந்திடலாமா’, ‘தமிழ் எழுத்தறிவோம்’, ‘கல்விக்கு அழகு கசடற எழுதுதல்’ எனத் தமிழுக்காகப் பல நூல்களை எழுதியுள்ளார்.

**“அப்பளம் உடைந்துவிடும்!”**

“தொலைக்காட்சியில் அவர் பாடம் நடத்தும் அழகே தனி” என்று அவருடைய மாணவர் ஒருவர் சொல்கிறார். “வகுப்பில் சில ஆசிரியர்கள் பாடம் நடத்தினால் பிடிக்காது. ஆனால், இவர் எத்தனை மணி நேரம் பாடம் நடத்தினாலும் அதைக் காதுகொடுத்து கேட்க மாணவர்கள் ஆர்வமுடன் இருப்பர். ‘அப்பளம்’ என்கிற வார்த்தையைக்கூட அழகாய் உச்சரிப்பார். ஆம், அந்த வார்த்தையை எழுதும்போது ‘ப்’ என்ற எழுத்தின் மீது வைக்கும் புள்ளியைக்கூட அழுத்திவைக்க வேண்டாம் என்பார். அழுத்திவைத்தால், அப்பளம் உடைந்துவிடும் என்று நகைச்சுவையுடன் பாடம் நடத்துவார்” என்கிறார் அந்த மாணவர்.

**மு.க.ஸ்டாலினிடம் கோரிக்கை!**

கடந்த சில மாதங்களுக்கு முன்பு, நன்னன் குறித்து தன்னுடைய முகநூல் பக்கத்தில் முன்னாள் மேயரும், தற்போதைய எம்.எல்.ஏ-வுமான மா.சுப்பிரமணியன் பதிவொன்றை வெளியிட்டிருந்தார். அதில், “நன்னனின் உடல்நலம் குன்றியிருப்பதை அறிந்து தி.மு.க. செயல் தலைவர் மு.க.ஸ்டாலின் அவரது இல்லத்துக்குச் சென்றார். அப்போது அவரிடம்... ‘எனக்கு நினைவாற்றல் நன்றாக இருக்கிறது... இயக்கப்பணி ஆற்றிட

என்னையும் பயன்படுத்திக்கொள்ளுங்கள்' என்று கோரிக்கைவைத்தார் நன்னன். சுற்றி நின்ற நாங்கள் அனைவரும் வாயடைத்து நின்றோம்" என்று பதிவிட்டுள்ளார்."[நன்றி:விகடன்-7நவ.2017

## பெரும்புலவர் மா.நன்னன் அவர்களின் பெருமைமிகு புதல்வியர்

மறைமலை அடிகளாரின் தமிழியக்கமும் தந்தை பெரியாரின் அறிவியக்கமும் தம் இரு கண்களாகப் போற்றிவாழ்ந்த நன்னன் அவர்கள் இயற்றிய நூல்களையும் பரப்பிய கொள்கைகளையும் அவர்வழிநின்று இன்றும் பரப்பிவரும் பணியைப் பெருமிதத்துடன் ஆற்றி வருபவர்கள் மானமிகு வேண்மாள் அவர்களும் மானமிகு அவ்வை அவர்களும் என்பதைத் தமிழறிந்தோர் அனைவரும் அறிவர்.நன்னன் பெற்ற புதல்வியர் என்பதோடு அவர் ஊட்டிவளர்த்த திராவிட இயக்க விழுமியங்களைப் போற்றும் கொள்கைச்சிறப்பினர் என்பதே இவர்களைப் பற்றிய சரியான அறிமுகமாகும்.



மானமிகு அவ்வை & மானமிகு வேண்மாள்

இவர்களைப் போல் தமிழியக்க உணர்வும் தன்மதிப்பு இயக்கச் செயலார்வமும் கொண்ட மகளிர் வீட்டுக்கு ஒருவர் இருந்தால் தமிழ்மறுமலர்ச்சியும் தமிழின எழுச்சியும் இயல்பாக எங்கும் ஓங்கும் என்பதில் ஐயமில்லை. தமிழ்ச் சான்றோர்களின் வீட்டுப் பெண்கள் தத்தம் பெற்றோர்களின் கொள்கைகளையும் விழுமியங்களையும் அடுத்த தலைமுறைக்கு எடுத்துச் செல்ல இவர்களைப் போல் செயற்படும் நாள் மலருமா?

**அவ்வை நன்னன்**

37ஆண்டுகள் வங்கிப்பணி.ஓய்வு பெற்ற பிறகு அப்பா நன்னன் அவர்களுக்கு நூல்கள் வெளியிடும் பணிகளில் துணையாக இருத்தல்.அப்பா மறைந்த பிறகு நன்னன் குடி அறக்கட்டளை வழியாக அப்பா நூல்களை வெளியிடுதல். பள்ளி மாணவர்களுக்குத் "தமிழைத் தமிழாக்குவோம்* தேர்வுகள் நடத்தி பரிசுகள் வழங்குதல். ஆண்டு தோறும் சிறுகதைப் போட்டி நடத்தி பரிசுகள் வழங்குதல்.அய்ந்து உயர்திணை திருமண வாழ்விணையருக்குப் போற்றியும் பரிசுகளும் வழங்குதல்.நன்னன் குடி என்ற வலையொளி வாயிலாக காணொளிகள் வழங்குதல்.தமிழ்நாடு கலந்துரையாடல் குழுவின் செயற்குழு உறுப்பினர். இலக்கிய பகுத்தறிவு கூட்டங்களில் கலந்து கொண்டு உரையாற்றுதல் என இயன்ற பணிகளைச் செய்து வருகிறார்.கவிதை உறவின் கவிதைச் செல்வர் விருது பெற்றிருக்கிறார்.

வேண்மாள் நன்னன்;

35 ஆண்டுகள் வங்கிப்பணி ஆற்றி ஓய்வு பெற்ற பிறகு அப்பா நன்னன் அவர்களுக்கு நூல்கள் வெளியிடும் பணிகளில் துணையாக இருந்தார்.அப்பா மறைந்த பிறகு நன்னன் குடி அறக்கட்டளை வழியாக அப்பா நூல்களை வெளியிடுதல். பள்ளிப்பிள்ளைகளுக்குத் தமிழைத் தமிழாக்குவோம் தேர்வுகள் நடத்தி பரிசுகள் வழங்கியும் ஆண்டு தோறும் சிறுகதைப் போட்டி நடத்தி பரிசுகள் வழங்கியும் மொழி இலக்கியவளர்ச்சிக்குத் தம்மால் இயன்றபணியாற்றிவருகிறார். அய்ந்து உயர்திணை திருமண வாழ்விணையருக்குப் போற்றியும் பரிசுகளும் வழங்கிச் சமூகநீதி பற்றிய விழிப்புணர்வு ஏற்படுத்திவருகிறார்.நன்னன் குடி என்ற வலையொளி வாயிலாக காணொளிகள் வழங்கிவருகிறார். இலக்கிய பகுத்தறிவு கூட்டங்களில் கலந்து கொண்டு தந்தைவழியில் தமிழ் முழக்கமும் கொள்கைவிளக்கமும் வழங்கிவருகிறார்.பகுத்தறிவாளர் கழகத்தின் மாநில துணைத்தலைவர்.தமிழ்நாடு மூதறிஞர் குழுவின் துணைத் தலைவர்.தமிழ்நாடு கலந்துரையாடல் குழுவின் செயற்குழு உறுப்பினர்.

## புலவர் மா.நன்னன் நூற்றாண்டுக் கருத்தரங்கு



‘’சொல்லுதல்யார்க்கும்எளியஅரியவாஞ்
சொல்லியவண்ணஞ்செயல்’’(குறள்-664)

சொல்லும் செயலும் ஒன்றாக வாழ்ந்தவர்; தமிழாய் வாழ்ந்தவர்; பெரியாரைப் பேசாத நாளெல்லாம் பிறவா நாளென்றுஉணர்ந்து பெரியாரின் பெருநெறி பற்றி ஒழுகி வாழ்ந்தவர், பெரும்புலவரும் பெரியார் பேருரையாளருமாகிய புலவர் மா.நன்னன் அவர்கள்.

அவர்தம் நூற்றாண்டு 2022-ஆம் ஆண்டு சூலைத்திங்கள் முப்பதாம் நாளன்று தொடங்கியது. நூற்றாண்டைச் சிறப்பிக்கும் நோக்கோடு நடத்தப்பட்ட நிகழ்வுகளில் ஒன்று 2023ஆம் ஆண்டு மார்ச்சு பத்தொன்பதாம் நாளன்று நடந்த கருத்தரங்கு. சென்னைக் கோட்டூர்புரத்திலுள்ள தமிழ் இணையக் கழகக் கூட்டரங்கில் திராவிடர் கழகப் பரப்புரைச் செயலர் வழக்குரைஞர் அ.அருள்மொழி அவர்கள் நிகழ்வுக்குத் தலைமையேற்றுச் சிறப்புரையாற்றினார்கள்.

இவ்விழாவுக்குப் புலவர்மா,நன்னன் அவர்களின் பெருவாழ்வின் சிறப்புகளைத் தொட்டுக்காட்டி அவருக்கு மகளாகிய மானமிகு வேண்மாள் அவர்கள் தொடக்க உரையாற்றினார்கள் மாநிலக்கல்லூரியின் தமிழ்த்துறைத் துணைப்பேராசிரியர் முனைவர் ப.வெற்றிநிலவன் அவர்கள் அனைவரையும் வரவேற்றார்கள்.

கருத்தரங்கத் தலைமையேற்றுச் சிறப்பித்த தமிழ்நாட்டரசின் பாவேந்தர் விருதாளர் மானமிகு வாலாசாவல்லவன் அவர்கள், புலவர்மா.நன்னன் அவர்கள் எளிய வேளாண்குடியில் பிறந்து, உழைத்து தமிழ்வளர்ச்சித்துறை இயக்குநர் என்னும் உயரிய பணியாற்றிய சிறப்புகளையும் புலவர்மா.நன்னன் அவர்களின் பரந்த பயனுள்ள எழுத்துப்பணிகளையும் பற்றிப் பேசும்போது தம்மைப் போன்ற எழுத்தாளர்களுக்கு *நல்ல உரைநடை எழுதவேண்டுமா?* என்னும் நூல் பெரும் வழிகாட்டியாக இருப்பதை மகிழ்வோடு விளக்கிப் பேசினார்.

திராவிட இயக்கப்பேச்சாளர் வழக்குரைஞர் மானமிகு சே.மெ.மதிவதனி அவர்கள், புலவர்மா.நன்னன் அவர்களின் *காலம் அல்லது மூலம்* என்னும் நூலின் சிறப்புகளை எடுத்துரைத்தார். அறிவியலின் பெருங்கண்டுபிடிப்பாகிய “பெருவெடிப்பு” என்பதைத் தந்தைபெரியாரவர்களின் வழியில் மக்கள்மொழியில் விளக்கியுள்ளார்.



முன்வரிசையில் அமர்ந்திருப்போர்
1. மதிவதனி 2. பேரா கவிதா 3 வழக்குரைஞர் அருள் மொழி 4 வாலாசா வல்லவன் 5 குமணராசன் 6. பேரா தமிழ் இயலன் 7. நன்னன் குடி வேண்மாள்.
பின்வரிசை இடமிருந்து 1. நன்னன் குடி தமிழ்ச்செல்வன் 2. நன்னன் குடி அவ்வை
பேசிக் கொண்டிருப்பவர் பேரா வெற்றி நிலவன்

சமூக ஆசிரியராக தெரிந்த செய்தியிலிருந்து தெரியாத செய்திகளை விளக்கியிருக்கிறார். சரியானவற்றைச் சரியான முறையில் எழுதியிருக்கிறார். இயற்கை செயற்கை என்பன பற்றிய சிந்தனைகளை எழுதியிருக்கிறார், நல்லநேரம் கெட்டநேரம் என்பவை புரட்டே என அறிவியல் வழியில் நிறுவுகிறார் என்றார். முத்தாய்ப்பாக இந்நூலை அடிப்படையாகக் கொண்டு அறிவியல் ஆய்வு செய்யலாம் என்றும் பேசினார்.
மணிமேகலைக் காப்பியத்துக்குப் புலவர்மா.நன்னன் அவர்கள் ஆறடுக்குமுறையில் உரையெழுதியிருக்கிறார். அந்நூல் பற்றி எத்திராசு மகளிர்கல்லூரியின் தமிழ்த்துறை உதவிப்பேராசிரியர் முனைவர்கவிதா அவர்கள் சிறப்பாகப் பேசினார். சமத்துவக் குமுகாயம் அமைக்க உதவும் இக்காப்பியத்தை யாவரும் எளிதில் புரிந்துகொள்ள உதவுவதாக இந்நூல் அமைந்திருக்கிறது. பொழிப்பில் புலவர்மா.நன்னன் அவர்கள் மணிமேகலைக் காப்பியத்தை யாத்த சாத்தனாரின் கருத்துகளைக் கூறினார். கருத்துரைப் பகுதியில் தம் கருத்துகளைப் பகுத்தறிவுத்தளத்தில் நின்றுகொண்டு பேசுகிறார். நல்லன செய்வதைத் தடுப்பது எப்படி கடவுளாக



இடமிருந்து வலமாக - 1.நன்னன் குடி தமிழ்ச்செல்வன் 2. திருக்குறள் காமராசு 3. நன்னன் குடி வேண்மாள் 4. மதிவதனி 5.பேரா கவிதா 6. வழக்குரைஞர் அருள் மொழி 7. வாலாசா வல்லவன் 8. குமணராசன் 9. பேரா வெற்றி நிலவன் 10. பேரா. தமிழ் இயலன் 11. நன்னன் குடி அவ்வை 12. சக்திவேல்

முடியும் எனப் புதிய சிந்தனைகளை விதைக்கிறார். பகுத்துண்ணும் பெரும்பண்பைச் சிறப்பாக விளக்கியிருப்பதைக் கூறிய முனைவர் கவிதா அவர்கள் இவ்உரைநூல் பெரும்பயன் விளைக்கும் என்றார்.

குறள் நம்மொழியின் பெருமை மட்டுமல்ல நம் வாழ்வின் நெறி எனத் தொடங்கிக் கலைமாமணி இராதாகிருட்டிணன் அவர்கள் திருக்குறள் விளக்கஉரை பற்றிய தம் ஆய்வுரையை வழங்கினார். புலவர்மா.நன்னன் அவர்கள் திருக்குறளை மூலம், உரைப்பாட்டு, சொற்பொருள், விளக்கம், கருத்து எனும் முறையில் விளக்கியிருக்கும் சிறந்த தனித்தன்மையை வியந்து பாராட்டினார். அவர்தம் உரையை தமிழாசிரியர் திருக்குறள் காமராசு அவர்கள் படித்தார்கள்.

நான் ஓர் இ.அ.ப.கழகம் என்னும் பயிற்சிக்கல்லூரியின் இயக்குநர் பேராரியர் தமிழ்இயலன் அவர்கள் புலவர்மா.நன்னன் அவர்களின் *நல்லஉரைநடைஎழுதவேண்டுமா?* என்ற நூல் பற்றிய ஆய்வுரையில் பின்வருமாறு குறிப்பிட்டார். ஒரு மானுடக் கணினி போல அய்யாஅவர்கள் ஆறாயிரத்து அய்ந்நூறுக்கும் மேற்பட்ட துளக்கங்களுக்கு துலக்கங்கள் தருகிற இரு

பெருந்தொகுப்புகளைக் கொண்டது. செய்தித்தாள்களிலும், ஊடகங்களிலும் இருக்கின்ற பிழைகளைச் சுட்டித் திருத்தங்களைச் சொல்லுகிறது இந்நூல்.

எடுத்துக்காட்டாக ஒரு சொற்றொடர் இறந்தகாலத்தில் தொடங்கி நிகழ்காலத்தில் முடிவதைச் சுட்டுகிறார். சில சொற்றொடர்களைத் தந்து படிப்பவர்களைச் ‘சரியானது எது’ எனச் சிந்திக்கத் தூண்டுகிறார். இந்நூலின் கருத்துகளை செய்தியாளர்களிடமும் சிறப்பாக மாணவர்களிடமும் கொண்டுசேர்க்கவேண்டும் என்றார்.



**நிற்பவர்களில் முன்வரிசை இடமிருந்து வலம்:** 1. தேன்மொழி 2. நன்னன் குடி அவ்வை 3. பேரா வேலம்மாள் இளவரசு 4. வழக்குரைஞர் அருள் மொழி 5.நன்னன் குடி பார்வதி நன்னன் 6. கலைச்செல்வி புலியூர் கேசிகன் 7. நன்னன் குடி வேண்மாள்

**பின் வரிசை இடமிருந்து வலம்:**

1.இறைக்குருவனார் மருமகன் 2. இ. அங்கயற்கண்ணி 3. பேரா கவிதா 4. மதிவதனி

*‘சும்மாவிருக்கமுடியவில்லை’* எனும் நூலைக் கடல்சார்பொறிஞர் சு.குமணராசன் அவர்கள் ஆய்ந்துரைத்தார்.578 பக்கங்களைக் கொண்ட இந்நூல் மொழி,இலக்கியம்,பகுத்தறிவு போன்ற பல்வேறு கருத்துகளைக்  கொண்டது. நன்னன்அவர்கள் எவ்வெப்போது தமக்கு எண்ணங்கள் கிளர்ந்தெழுகின்றனவோ அவ்வப்போது அவற்றை எழுதிவைத்திருக்கிறார் .அவை பல தலைமுறையினருக்கும் வழிகாட்டும். தமிழ் இயல்பான மொழி என்கிறார். தாம் ஆசிரியராக எப்படி பணியாற்றினோம். இருள்முதலாஒளிமுதலா, மானுடஇனத்தில் ஏற்பட்டுள்ள மாற்றங்கள் என்பன பற்றிய மா.நன்னன்அவர்களின் சிந்தனைகளை விரிவாக எடுத்துரைத்தார். இந்நூல் அவரது தேடுதலின் வெளிப்பாடு என்றும் கூறினார்.

திராவிடர்கழகப் பரப்புரைச் செயலர் வழக்குரைஞர் மானமிகு அ.அருள்மொழி அவர்கள் விழாத்தலைமையுரை ஆற்றினார். புலவர் மா.நன்னன் அவர்கள் அனைவரையும் இணைக்கின்ற தளமாக நம்மொழி. இனம், பொதுத்தொண்டு ஆகியனவற்றை ஆற்றுகிற நம் குடும்பங்கள் விளங்குகின்றன என்றுரைத்தவர். பெரியாரவர்கள் தன்னுடன் வந்துவிடுகிறாயா என்று கேட்குமளவுக்கு நன்னன் அவர்களின் கொள்கைத்தெளிவும் பேச்சுத்திறமையும் இருந்தது. தமிழ்ப்புலவர்கள் பலரையும் போல் பன்முகஆற்றலாளாராக விளங்கியவர். நன்னன் அவர்கள் திருமணங்களை நடத்திவைத்து வாழ்த்தும்போது அனைவருக்கும் ஏற்ற மக்கள்மொழியில் தந்தைபெரியாரின் நடையில் சுவையான அவரது பேச்சு எவ்வாறு சிறந்திருந்தது என்பன போன்ற செய்திகளை இனிமையாக எடுத்துரைத்தார்கள். ‘காலம்’ என்ற நூலின் முன்னுரையில் யான் முழுக்க முழுக்க ஒருபெரியாரியலன் ஆகையால் அறிவியல்கருத்துகள் பலவற்றை எம்மால் வெளியிட முடிகிறது. ‘நல்ல உரைநடை எழுதவேண்டுமா’ என்ற நூலிலிருந்து  ‘பல பள்ளிகளில் தலைமைஆசிரியை என்று தவறாக எழுதியிருந்தவைகளைத் திருத்தி தலைமைஆசிரியர் என எழுதும்படிக் கூறினேன்’என்றார்.
‘மணிமேகலையில் மாதவி மணிமேகலையைத் தன்மகளல்ல இவள் கண்ணகியின்மகள் என்று மாற்றியதால் வருணநெறியிலிருந்து அவளைக் காப்பாற்றி புரட்சிக்கொடியை ஏற்றினாள் என்பது போன்ற பல கருத்துகளைக் கூறி, எனைத்தானும் நல்லவை கேட்க என நாம் உணர்வோம். வாழ்க்கையில் முன்னேற இந்நூல்கள் புலவர்நன்னனின் கருத்துகள் படிக்கல்லாய் அமையும்’ என்றார்.
புலவர்மா,நன்னன் மகள் அவ்வை  அவர்கள் இணைப்புரையும் நன்றியுரையும் ஆற்றினார்.



# "குறள் வழி மேலாண்மையியல்''

## இணையத்   தொடர்வகுப்பு நிறைவுவிழா

[வலையரங்கம்]

உலகத் திருக்குறள் இணையக் கல்விக்கழகத்தின் சார்பில் சிறப்புறு பேராசிரியரும் நிதியியல் வல்லுநரும் மேனாள் பஞ்சாபு நேசனல் வங்கியின் பொது மேலாளருமாகிய திரு சோம வீரப்பன் அவர்கள் நடத்திவந்த "குறள் வழி மேலாண்மையியல்,': இணையத் தொடர்வகுப்பு 9/4/23 அன்று நிறைவுற்றது.



வலையரங்காக நடைபெற்ற நிறைவுவிழாவில் ஆர்வார்டு பல்கலைத் தமிழியல் இருக்கை நிறுவுநர் மருத்துவர் விசய் சானகிராமன் நிறைவுரை ஆற்றினார்.தமது நிறைவுரையில் உலகெங்கும் தமிழ்க்கல்வி செழித்து வருவது போலவே குறளும் பரவிவருவது குறித்துத் தம் மகிழ்வை வெளிப்படுத்தினார். உலகத் திருக்குறள் இணையக் கல்விக்கழகம் மேற்கொண்டுவரும் முயற்சிகளுக்குத் தம் மனமார்ந்த வாழ்த்துகளைத் தெரிவித்தார்,நிதியியல் வல்லுநர் சோம வீரப்பன் அவர்கள் நடத்திய வகுப்பின் பயன் துய்த்த மாணாக்கர்கள் தொடர்ந்து பயிலப் பயிலத் திருக்குறளின் ஆழமும் செறிவும் நன்கு புலனாகும் எனவும் அனைவரும் வள்ளுவர் குறளை வையகமெங்கும் பரவச் செய்யும் முயற்சியில் தொடர்ந்து ஈடுபடுமாறும் வேண்டினார். உலகத் திருக்குறள் இணையக் கல்விக் கழகத்தினரின் பணிகள் வெல்லத் தம் வாழ்த்தினைத் தெரிவித்தார்.

பாரிசு நகரிலிருந்து பேராசிரியர் பெஞ்சமின் இலெபோ வர இயலாச் சூழலில் அவர் வழங்கிய வாழ்த்துரையின் ஒலிப்பதிவு ஒலிபரப்பப்பட்டது.பேராசிரியர் பெஞ்சமின் இலெபோ அவர்கள் குறளின் மாட்சியையும் குறள் பரப்பவேண்டிய நம் கடமையையும் நயமுற விளக்கினார். இணையக் கல்விக் கழகத்தின் பொறுப்பாளர்களை வாழ்த்தியதுடன் இணையத் தொடர்வகுப்பு நடத்திய திரு சோம வீரப்பன் அவர்கள் சிறப்பினையும் மனமாரப் பாராட்டினார்.(அவர் வழங்கிய எழுத்துரை வேறொரு பக்கத்தில் வெளியாகியுள்ளது.)




'வள்ளுவர் குரல்' இயக்கத்தின் நிறுவனர் திரு.சி.இராசேந்திரன் அவர்கள் தமது வாழ்த்துரையில் இணையவழிப் பயின்ற



மாணவர்களை மனமாரப் பாராட்டினார்.மாணவர்கள் இப் படிப்புடன் அமைவு கொள்ளாமல் மேலும் குறளை நுணுகிக் கற்றால் வாழ்வில் உயர்வுகளை வசப்படுத்தலாம் என அவர் கூறினார்.மனத்துக்கண் மாசிலனாதல் அனைத்து அறனும்

ஓங்கச் செய்யும் என்னும் வள்ளுவர் வாய்மொழிக்கிணங்க அறம் தழைக்கச் செய்ய அனைவரும் குறளைத் தம் வாழ்வின் செயல்நூலாக ஏற்றுக் குறள்நெறியில் செயற்பட வருமாறு அவர் அனைவரையும் வேண்டினார்.




வட அமெரிக்கத் தமிழ்ச்சங்கப் பேரவைத் தலைவர் திரு பாலா சாமிநாதன் அவர்கள்.ஒவ்வோர் ஆண்டும் ஆண்டு முடிவையும் புத்தாண்டுப் பிறப்பையும் நாம் கொண்டாடுவதன் நோக்கம் அவ்வாண்டில் என்ன செய்தோம் என மீளாய்வு செய்தற்கே என்றார்.இதுபோலவே போட்டித் தேர்வு எழுதுவது நாம் என்ன புரிந்துகொண்டோம் எதைப் புரிந்துகொள்ளத் தவறினோம் என மீளாய்வு செய்தற்கே என்றார்.போட்டித் தேர்வு எழுதிய அனைவரையும் மனமாரப் பாராட்டி வாழ்த்துவதாகக் கூறினார்.இளைஞர் உள்ளத்தில் தமிழ் நிலைபெறும்வகையில் இவ்வகைக் கல்விமுறைகள் உலகெங்கும் பரவிவருவதாகக் கூறி உ.தி.இணையக் கல்விக் கழகத்தையும் பாராட்டினார்.



அமெரிக்காவிலிருந்து இணையவழிக் குறள் கற்ற மாணாக்கர்களுள் ஒருவராகிய திரு.மோகன் வைரக்கண்ணு தாம் இந்த இணையக் கல்வி கற்கும் வாய்ப்பைப் பெற்றதைப் பெருமிதத்துடன் போற்றினார்.இந்தக் கல்வியின் விளைவாக இப்போது எங்கும் குறள் பொழிவு,குறள் முற்றோதல் ஆகியவற்றில் ஈடுபடுதாகவும் இது தன்னைச் சார்ந்தவர்களுக்கும் தனக்கும் பெரும் நிறைவை வழங்குவதாகவும் அவர் உவகைபொங்கக் குறிப்பிட்டார்.

தன் மகன் செந்தமிழ்ச்செல்வனை இவ் வகுப்பில் சேர்த்துத் தானும் சேர்ந்து கற்ற திருமதி.அங்கயற்கண்ணி இவ் வகுப்பின் விளைவாகத் தமது வாழ்வியல் செயற்பாடு புதிய எழுச்சி பெற்றதாகக் கூறினார்.புதுவை

வேலாயுதம் அவர்களின் அறிவுரைக்கிணங்க இவ் வகுப்பில் சேர்ந்ததாகவும் சேர்ந்தபின் இவ் வகுப்பால் தமது ஆளுமை மேம்பட்டதாக உணர்வதாகவும் கூறினார்.



புதுவை வேலாயுதம் அவர்கள் தமிழ் நம் வாழ்வின் உயிர்நாடியாக விளங்குவதாகவும் குறளைக் கற்பதனாலும் கற்றதனைப் பிறரொடு பகிர்வதாலும் ஏற்படும் மனநிறைவுக்கு அளவே இல்லை எனவும் குறிப்பிட்டார்.

திருமதி வேதக்கனி அவர்கள், அவரது மகன் காட்வின் என இருவரும் தமிழியலன் அவர்களின் ''நான் ஐ.ஏ.சு.பயிலகத்துக்கு'' நேரில் வந்து அங்கிருந்தவாறே இணையவழி வலையரங்கில் பங்கேற்றனர். இருவருக்கும் நமது நிறுவனத்தின் சார்பில் பேராசிரியர் சி.இலக்குவனார் அவர்களின் "திருக்குறள்-எளிய பொழிப்புரை" பரிசளிக்கப்பட்டது.




இணைய வகுப்பில் பயின்ற அனைத்து மாணவர்களுமே வலையரங்கில் கலந்துகொண்டு வகுப்பு பயனளித்தாகவும் பேராசிரியர் சோம வீரப்பன் அவர்களின் பாடம் நடத்திய முறை தங்களைப் பெரிதும் கவர்ந்ததாகவும் இக் கல்வி தங்கள் வாழ்க்கைமுறையில் மேலும் உயர்வுபெற வழிவகுக்கும் எனவும் கூறியபோது அனைவரும் மகிழ்வுடன் ஏற்றனர்.

திருமதி செல்வி முருகேசன்(அமெரிக்கா) ,திருமதி.செயந்தினி விக்னராசன்(இலங்கை), திருமதி தாமரை சீனிவாச ராவ் (கம்போடியா),திருமதி அவ்வை நன்னன்(தமிழ்நாடு), திருமதி.திலகவதி (தமிழ்ப்பல்கலைக்கழகப் பேராசிரியர்),மருத்துவர் கலைவேந்தன் எனப் பல்வேறு ஊர்களிலிருந்து பல்வேறு பெருந்தகைகள் உரையாற்றினர்.



முனைவர் தமிழியலன் குறிப்பிட்டவாறு பன்னிரண்டு அகவைச் செந்தமிழ்ச்செல்வன் முதல் எண்பத்திரண்டு அகவைப் புலவர் தங்கவேலனார் வரை சோம வீரப்பன் அவர்களிடம் குறள் கற்றதைப் பேருவகையுடனும் பெருமிதம் பொங்கவும் பாராட்டினர்.



வங்கியில் உயர் அலுவலராகப் பணியாற்றிய ஒருவர் அனைத்துவயதினரும் பாராட்டும் வண்ணம் ஆசிரியப்பணி புரிந்தமை பெருஞ்சிறப்பே.சோம வீரப்பன் அவர்கள் நம் அனைவரின் பாராட்டுக்கு உரியவர்.பொருளும் வேண்டாது புகழும் கருதாது தம் நேரத்தையும் உழைப்பையும் ஆற்றலையும் வழங்கிய **சோம வீரப்பன் அவர்கள்** ஈகைப் பண்பினுக்கு எடுத்துக்காட்டாகப் போற்றப்படுவார்.

தமது வலையரங்கக் கணக்கிலிருந்து நேரத்தை ஒதுக்கித் தாமும் வலையொழுங்கு செய்வதில் ஈடுபட்டுத் தம் மாணவர்களும் பணியாற்ற ஈடுபடுத்திய **முனைவர் தமிழியலன்** அவர்களையும் நாவாரப் போற்றுவோம்.

நிறைவு விழா இனிதே நிறைவுற்றது.''இஃது முடிவல்ல,தொடக்கம்'' என அனைவரும் கருதுவதால் உலகத் திருக்குறள் இணையக் கல்விக்கழகம் மேலும் இதுபோன்ற பல்வேறு இணையவழிப் பயிலரங்குகளை நடத்திக் குறள் கல்வி மேம்பட ஆவன செய்யும் என்பது உறுதி.

## பேராசிரியர் பெஞ்சமின் இலெபோ அவர்கள் வாழ்த்துரை



பேரன்புக்கும் பெருமதிப்புக்கும் உரிய பேராசிரியப் பெருந்தகை, திருக்குறள் இணையக் கல்விக் கழகஅமைப்பாளர் மறைமலை இலக்குவனார் அவர்களே!உற்றுதழி உதவியும் உறுபொருள் கொடுத்தும் பிற்றை நிலை முனியாது தொண்டு புரிந்து வரும் துணை அமைப்பாளரண பேராசிரியர் தமிழ் இயலன் எனும் தனசேகரன் அவர்களே! இணையத் தொடர்வகுப்பு நடத்திய சோம வீரப்பன் அவர்களே! சிறப்புரை ஆற்றிய அமெரிக்க மருத்துவர் விஜய் ஜானகிராமன் அவர்களே நெஞ்சு களனாகச் செவி வாயாகச் சின்னத்திரை முன்னமர்ந்திருக்கும் சான்றோர் பெருமக்களே!பார்புகழும் பாரீசுப் பெருநகரின் ஈபிள் கோபுர உச்சியில் நின்று வணக்கம் சொன்னேன் இன்று!

திருக்குறள் இணையக் கல்விக் கழக உரைகளின் நிறைவு நாள் நிகழ்ச்சிக்கு வாழ்த்துரை வழங்குமாறு பேராசிரியப் பெருமகனார் வேண்டுகோள் விடுத்தார். அவருக்கு என் நன்றி. என்னுரை கேட்கச் சின்னத் திரை முன்னமர்ந்திருக்கும் உங்கள் அனைவரும் என்ன நெஞ்சார்ந்த நன்றி!

வள்ளுவன் என் நண்பன் ; இமைப்பொழுதும் என் நெஞ்சில் இருந்து நீங்காத அன்பன். அன்னவனை என்னவனை ஒருமையில் அழைப்பதில் பெருமிதம் காண்பவன் நான்! நாளின் தொடக்கத்தில், "அகர முதல எழுதெல்லாம் ஆதி பகவான் முதற்றே உலகு " எனப் பூபாளம் பா டி என்னைத் துயில் எழுப்புவான்; இரவில் கழாக் கால் பள்ளியில் வைக்காதே என்று அறிவுறுத்தி என்னை உறக்கத்தில் ஆழ்த்துவான்! இங்கிவனை யான் பெறவே என்ன தவம் செய்துவிட்டேன்! நண்பனாய் மந்திரியாய்ப் பார்வையிலே சேவகனாய்ப் பண்பிலே தெய்வமாய் நின்றெனக்கு வழி காட்டும் வள்ளுவன் வானளந்த புகழை எல்லாம் தேனளந்த தமிழாலே தானளந்த தமிழ்ப் புலவன்! அவன் படைத்த குறட்ட பாக்களோ தமிழ்த்

தென்றலில் தலை அசைத்து ஆடும் சின்னஞ் சிறு பூக்கள்: ஈரடியால் உலகளந்த வாமன அவதாரத்துப் பாக்கள்!

திருவள்ளுவனின் திருமலரடிகளை வணங்கி என் வாழ்த்துரையைத் தொடங்குகிறேன்!

அக்காலத்தில் குறள்நெறி கண்டவர் இலக்கணப் பேராசான் இலக்குவனார். தந்தை சொல் மிக்க மந்திரமில்லை என்ற முது மொழிக்கு ஏற்பத் திருக்குறள் இணையக் கல்விக் கழகத்தை உருவாக்கினார் பேராசிரிய நண்பர் மறைமலைஇலக்குவனார்.உடனிருந்து உதவியவர் துணை அமைப்பாளர் பேராசிரியர் தனசேகரன் . இணையத் தொடர்வகுப்பு நடத்தியவர் உயர்திரு சோம வீரப்பன் அவர்கள். இந்த அமைப்பில் அரிய பெரிய அறிஞர் பெருமக்கள் சிறப்புரைகள் ஆற்றி இருக்கின்றனர்! குறட்பாக்களின் மாண்புகளைப் போற்றி இருக்கிறார்கள்! தாயாம் தமிழின் தனி ஆசீர் பெற்ற பேராசிரிய நண்பர் மறைமலை இலக்குவனார், பேராசிரியர் தனசேகரன் உரை ஆற்றிய அறிஞர்கள் அனைவரும் வாழி வாழி பல்லூழி என வாழ்த்துகிறேன் .

குறள் வழி மேலாண்மை என்பது பொதுத் தலைப்பு. இதனை இதனால் இவன் முடிக்கும் என்றாய்ந்து அதனை அவன் கண் விடல்" என்ற குறள் ஒன்றே போதும் மேலாண்மையை விளக்கிச் சொல்ல! தக்கார் தகவிலார் என்பது அவரவர் எச்சத்தாற் பெறப்படும் "என்ற குறள் மேலாண்மைத்துறையில் நிலைத்து நிற்பவர் யார் என்பதை எடுத்துக் கூறுகிறது. எடுத்த வினையை கொடுத்த பணியைச் சிறப்பாகச் செய்து முடிப்பவரே நிலைத்து நிற்க இயலும்.அரசப் பணியிலும் ஆட்சிப் பணியிலும் இதனைக் கண்கூடாகக் காணலாம்.

இதுவரை இங்கு நிகழ்த்தப்பட்ட உரைகள் இரண்டைப் பார்த்தால் இந்த உண்மை புலப்படும் மார்ச்சுத் திங்கள் 12 ஆம் நாளன்று பொருள்செயல் வகை பற்றிப் பேரா தமிழ் இயலன் அருமையான உரை நிகழ்த்தி இருக்கிறார்.என் நெஞ்சில் என்றென்றும் வீற்றிருக்கும் என் பேராசான் முவ அவர்கள் உரையின் கருத்துக்களை அழகாகத் தொகுத்து வழங்கி இருப்பதைப் பாராட்டியே தீரவேண்டும்.தமிழகத்தில் தமிழைவிடத் தமிங்கிலம்தானே அதிகம் பேசப்படுகிறது என்பதாலோ என்னவோ பேராசிரியர் குறட் பாக்களின் விளக்கத்தை ஆங்கிலத்திலும் கொடுத்திருக்கிறார். அந்த அதிகாரத்தில் ஏனைய பாக்களில் உவமை ஒன்றையும் உரைக்காத வள்ளுவன் 758 ஆம் குறளில் யானைப் போரை உவமை ஆக்குகிறான்! யானைகள் இரண்டு சமரிடும்போது அருகிருந்து பார்ப்பது தீங்கு பயக்கும்; குன்றின் மீது ஏறி நின்று பார்த்தால் போர்க் காட்சியும் தெளிவாகத் தெரியும்; போரிடும் யானைகளால் தீங்கும் நேராது.அது போலக் கைவசம் உள்ள பொருளைக்கொண்டே ஒருவன் செயலாற்றினால் அதாவது கடன் பெறாமலே செயலாற்றினால் நன்மை விளையும், இழப்பு ஏற்படாது.அதுவே பாதுகாப்பான செயலாகும். கிரேடிட் கார்டு வழங்கி நம் பொருளாதாரத்தைப் பாழாக்கும் இக்காலத்தில் மிகுந்த பயனாகும் பொருள் பொதிந்த அறிவுரை! இத்தகு விளக்கங்களை அளித்த பேராசியர் வாழ்க வாழ்க என வாழ்த்துகிறேன்!

**பஞ்சாப்  நேசனல் வங்கியின் மேனாள் பொது மேலாளர் உயர்திரு சோம வீரப்பன் அவர்கள்** பொச்சாவாமை, சொல்வன்மை, மன்னரைச் சேர்ந்தொழுகல் எனப் பல அதிகாரங்களைப்  பற்றி உரை நிகழ்த்தி இருக்கிறார்கள் பொச்சாவாமை  என்றால் கடமை மறத்தல், அலட்சியப் படுத்தல், இகழ்ச்சிப்படுத்துதல் எனப் பொருள் கூறி அவர் விளக்குகிறார்.தனி ஒருவர் உரையை எடுக்காமல் நாமக்கல் இராமலிங்கம் பிள்ளை, வ உ  சிதம்பரனார் , தமிழண்ணல், வ சு ப மாணிக்கனார் போன்ற பேரறிஞர்களின் உரைகளைக் கையாண்டிருக்கிறார்; விளக்கங்களை ஆங்கிலத்திலும்  கொடுத்திருக்கிறார். பெஞ்சமின் பிராங்க்ளின் போன்ற உலக அறிஞர்களின் கருத்துகளையும்  எடுத்துரைக்கிறார். திருமிகு சோம வீரப்பன் அவர்களையும் வாழ்த்தி வணங்குகிறேன்.

இந்த நிகழ்சிகளில் கலந்துகொண்டு பயன் பெற்ற நல்லோர்க்கும் என் வாழ்த்து திருக்குறளின் ஆழ அகலங்களை அலசி ஆராயும் அனைவருமே நம் வாழ்த்துக்கு உரியவர்கள்தாம்!இந்த ஆராய்ச்சிகள் தொடரவேண்டும்.தொட்டனைத்தூறும் மணற்  கேணி போல த்  திருக்குறள் ஆராய ஆராய அறிவு ஊறும் அறிவுக் கேணி!  அறிதோறும் அறியாமையை க் காட்டும் இலக்கியக் கண்ணாடி!
சொல்லுக்குள் வாக்கியத்தைச் சுருக்கி   வைத்த புலவன் என  வள்ளுவனைப்   பாராட்டுவார் கவிப்பேரரசு வைரமுத்து.
தற்போது திருக்குறள் அலை உலகு எங்கும் வீசிக்கொண்டு இருக்கிறது.அமீரகம், சிங்கப்பூர், மலேசியா போன்ற நாடுகளிலும் தமிழகத்திலும் திருக்குறள் மாநாடுகள் நடைபெறப் போவதாக அறிவிப்புகள் வந்த வண்ணம் உள்ளன! இங்கே பாரீசு புற நகர்கள் இரண்டில் வள்ளுவருக்குச் சிலை வைக்கும் முயற்சியும் நடைபெற்றுக்கொண்டு உள்ளது.இத்தனை  முயற்சிகளும் வெற்றி பெறுக என வாழ்த்துகிறேன்.
வாழ்த்துரையை நிறைவு செய்யும்முன், தீர்மானங்கள் சிலவற்றை உங்கள் முன் வைக்க விழைகிறேன் .
- இந்திய ஒன்றியத்தின் அரசு திருக்குறளை நம் திருநாட்டின் பொது நூலாக அறிவிக்க வேண்டும்; வழக்காடு மன்றங்களில் ஆணையிட்டுஉறுதி கூறும்போது பைபிள், குரான் , பகவத் கீதை போன்ற புனித நூல்களின் மேல் கை வைத்து உறுதி கூறுவது போல் திருக்குறள் மேலும் கை  வைத்து உறுதி மொழி கூறலாம் என்ற சட்டம் இயற்றவேண்டும்.
- திருக்குறள் நூலை உலகப் பொது நூலாக அறிவிக்குமாறு   யுனெசுகோவை(UNESCO) வலியுறுத்தவேண்டும்; உலகம் முழுவதும் திருக்குறளைப்  போற்றுமாறு செய்தல் வேண்டும்!
- அகில உலக மெய்ப்பொருள் அறிஞர்கள், தத்துவ வித்தகர்கள் யார் என்று கூகுளில் கேட்டால் சாக்கிரடீஸ் முதல் நம் இந்திய நாட்டின் கிருட்டிணமூர்த்தி வரை  பட்டியல் இடுகிறது கூகுள்!அந்தப் பட்டியலில் திருவள்ளுவர் பெயர் இல்லை! கூகுள் குழுமத்தின் தலைவர் திருமிகு பிச்சை என்னும் தமிழர்! இருந்தும் இந்த நிலை! ஆகவே தமிழ் அமைப்புகள்  அத்தனையும் சேர்ந்து குரல் கொடுத்துத் திருவள்ளுவர் உலகின் தலை சிறந்த தத்துவ ஞானி என அறிவிக்குமாறு குரல் கொடுக்கவேண்டும்; வேண்டுகோள் விடுக்க வேண்டும்!சிங்கப்பூரில் தத்துவ ஞானிகளின்  சிலைகள் வைத்திருக்கிறார்கள் அந்த வரிசையில் முதலிடம் பெற்று இருக்கிறான் வள்ளுவன் .சிங்கப்பூர்த்  தமிழர்கள் பெரும் பாராட்டுக்கு உரியவர்களே !

முத்தமிழ் அறிஞர் கலைஞர் அவர்கள் ஆட்சிக் காலத்தில் பேருந்துகளில் திருவள்ளுவர் படமும் திருக்குறளும் இடம் பெற்று இருந்தன.அந்த நல்ல வழக்கத்தை இப்போது மீண்டும் தமிழ் நாட்டரசு கொண்டுவரவேண்டும்.அதுமட்டும் அல்லாது தெருவெங்கும் குறள் முழங்க வேண்டும்!மக்கள் குறள் நெறி நின்று ஒழுக வேண்டும்

இவற்றை நிறைவேற்ற பாடுபடுவோம்; திருவள்ளுவன் வாழ்க! திருக்குறள் நெறி எங்கும் பரவுக!நன்றி வணக்கம்!















## நிறைவுவிழா வலையரங்கக் காட்சிகள்

## திருக்குறள் தேர்வுகளில் பரிசு பெற்றோர் விவரம்

**60 வயதிற்கு உட்பட்டவர்கள்**

முதல் பரிசு

திருமதி **ஜெயந்தி** (பிரான்ஸ்)

இரண்டாம் பரிசு

முனைவர். திருமதி. **வேதகனி அருண்குமார்** (காரியனூர்)

மூன்றாம் பரிசு

திருமதி **செந்தில்குமாரி** (பிராண்ஸ்)

**60 வயதிற்கு மேற்பட்டவர்கள்**

முதல் பரிசு

திருமதி **அவ்வை** (அமெரிக்கா)

இரண்டாம் பரிசு

திரு **வேலாயுதம்** (பிரான்ஸ்)

&

திருமதி **வேண்மாள் கோவிந்தன்** (அமெரிக்கா)

**சிறப்புப் பரிசு**

திரு **மு. தங்கவேலனார்** (பேராவூரணி)

செல்வன் **செ. தமிழ்த்திருமகன் செல்வராசு** (காரியானூர்)

திருமதி **கோகிலா** (ஜாம்ஷெட்பூர்)

**ஊக்கப் பரிசு**

- செல்வி **இரா. சூர்யா** (இராஜபாளையம்)
- திருமதி **சாந்தி வீரப்பன்** (பிரான்ஸ்)
- திரு **மோகன் வைரக்கண்ணு** (அமெரிக்கா)
- முனைவர் **அங்கயற்கண்ணி** (காரியனூர்)

மாணவர் வருகைப்பதிவை மேம்படுத்தும் பொருட்டு மாணவர்களிடம் வாங்கிய தொகை முழுமையும் அவர்களுக்குப் பரிசுகள் வழங்கவே பயன்படுத்தப்பட்டது.எத்தகைய பொருள்வருவாயும் கருதாது தன்னார்வப் பணியாகவே இந்த வகுப்புகள் நடத்தப்பட்டன.

இந்த வகுப்புகளில் கலந்துகொண்டு பயன்பெற்ற மாணவர்கள் வாழ்வில் எல்லா மேம்பாடுகளும் மேன்மைகளும் பெறுவர் என்பது திண்ணம்.

**வையகமெங்கும் வள்ளுவம் பரப்புவோம்.** **குறள்நெறி ஓங்கின் குடியரசு ஓங்கும்.**